# மீண்டும் அவசரநிலை வருமா?

Regd. No. TN-MS (C) 244 Phone 420212 4 பக்கம் விலை 50 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 7-7-1985 ஞாயிறு ★ வெள்ளூர் 8-7-1985 திங்கள் [இதழ் 255

## நிருபர்களை கவர்ந்த பிரதமர்

புதுடெல்லி, ஜூலை, 7— டெல்லியில் இன்று நடைபெற்ற பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசிய பிரதமர் ராஜீவ் காந்தி அனைத்துத்தரப்பு நிருபர்களையும் கவர்ந்து விட்டார்.

நிருபர்கள் போட்டி போட்டுக் கொண்டு கேள்விகளைக் கேட்டனர் அனைவரின் கேள்விகளுக்கும் பிரதமர் அமைதியாகவும் அதே சமயத்தில் நகைச்சுவையுடனும் பதிலளித்தார்.

ஆங்கிலத்தில் கேட்ட கேள்விகளுக்கு ஆங்கிலத்திலும், இந்தி, உருது மொழியில் கேட்ட கேள்விகளுக்கு அந்தந்த மொழிகளிலுமே அவர் பதிலளித்தது அந்த மொழிகளில் அவருக்குள்ள புலமையைக் காட்டியது.

எந்தக் கேள்விக்கும் பிரதமர் கோபமோ, ஆத்திரமோ அடையவில்லை.

ஒருசமயம் ஒரு நிருபர் எழுந்து 'என்னைப் பேச விடுங்கள் என்று கேட்ட போது, நீங்கள் கேட்பதற்குத் தானே வந்திருக்கிறீர்கள் தாராளமாகக் கேட்கலாம்' என்று பிரதமர் பதிலளித்ததும் பலத்த சிரிப்பொலி எழுந்தது.

நிருபர்கள் கூட்டம் நடைபெறும் 'விக்ஞான் பவன்' மண்டபத்தில் பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

ஆயுதங்களோ வெடிகுண்டுகளோ இருப்பதை கண்டுபிடிக்கும் இயந்திரம் வாசலில் வைக்கப்பட்டிருந்தது. அரைமணி நேரத்திற்கு முன்னரே நிருபர்கள் வந்து விட்டனர்.

குறிப்பிட்ட நேரத்துக்கு 6 நிமிடங்களுக்கு முன்னரே அங்கு வந்த பிரதமர் உடனேயே பேட்டியைத் தொடங்கி விட்டார்.

## இந்தியா அணுகுண்டு தயாரிக்குமா?

இந்தியா அணுகுண்டு தயாரிக்குமா என்று பிரதமரிடம் நிருபர்கள் கேட்டனர். அதற்கு பிரதமர் நேரடியாகப் பதிலளிக்கவில்லை.

ஆனால் பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிப்பது பற்றி பாரதம் மிகவும் கவலை கொண்டுள்ளது என்று குறிப்பிட்ட பிரதமர் அணுகுண்டு தயாரிப்பதில் பாகிஸ்தான் தீவிரம் காட்டினால் நாம் அதற்கு ஏற்றவகையில் பதிலடி கொடுப்போம் என்று பிரதமர் கூறினார்.

பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிப்பது குறித்து இந்தியாவின் கவலையை அந்நாட்டு வெளியுறவு அமைச்சர் இங்கு வந்த சமயம் தெளிவுபடுத்தியிருப்பதாகவும் ராஜீவ் காந்தி சொன்னார்.

இந்திய அமெரிக்க உறவில் மேலும் முன்னேற்றம் அடைந்துள்ளது என்றும் அதேசமயத்தில் சோவியத் யூனியனுடன் உள்ள உறவும் நட்பும் மேலும் விரிவடைந்துள்ளது என்றும் பிரதமர் கூறினார்.



சேலம் மாவட்ட முன்னாள் நகராட்சி உறுப்பினர் வழக். திரு கிருஷ்ணன் முதல்வர் புரட்சித்தலைவர் முன் கழகத்தில் இணைந்தார். அமைச்சர் ராசாராம் உடனிருக்கிறார்.

## மத்திய அமைச்சரவை மாறுதல் எப்போது? பிரதமர் ஆலோசனை

புதுடெல்லி, ஜூலை 7- மத்திய அமைச்சரவையில் மாறுதல் செய்வது பற்றி பிரதமர் ராஜீவ்காந்தி மூத்த அமைச்சர்களுடன் ஆலோசனை நடத்தினார்.

குஜராத் முதல்வராக இருந்த சோலங்கி மத்திய அமைச்சரவையில் இடம் பெறுவார் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

அமைச்சரவை மாறுதல் பெரிய அளவில் இருக்காது. சோலங்கியுடன் இன்னும் இருவர் புதிதாக அமைச்சர்களாகப் பதவி ஏற்பார்கள்.

இன்னும் ஒரு வார காலத்திற்குள் புதிய அமைச்சர்கள் பதவி ஏற்பார்கள், இம் மாதம் 23ம் தேதி பாராளுமன்ற கூட்டம் ஆரம்பமாகிறது. அதற்கு முன்னதாக புதிய அமைச்சர்கள் பொறுப்பு ஏற்பார்கள்.

குஜராத் முதல்வராக இருந்து பதவி விலகிய சோலங்கி அரசியல் அனுபவம்மிக்கவர். நிர்வாகத் திறமைமிக்கவர். தேசிய அளவில் அவருடைய சேவையை பயன்படுத்திக் கொள்வோம் என்று அகில இந்தியகாங்கிரஸ் பொதுச் செயலாளர் ராஜேந்திர குமாரிபாஜ்பாய் கூறினார்.

சோலங்கியின் நிர்வாகத்திறமையைப் பிரதமர் ராஜீவ்காந்தியும் பாராட்டினார்.

### ஆதாரம் இல்லாமல் புகாரா?

பதவியில் இருப்பவர்கள் மீது ஆதாரமின்றி அவதூறுகளை அள்ளி வீசுவது எளிது. ஆனால் அதில் எந்த அளவு உண்மை இருக்கிறது என்பதையும் எண்ணிப்பார்க்க வேண்டாமா என பிரதமர் வினவினார்.

குஜராத் முன்னாள் முதல்வர் சோலங்கி மீது விசாரணை எதுவும் நடத்தப்பட மாட்டாது என்றும் பிரதமர் அறிவித்தார்.

## பிரதமர் ராஜீவ் பேட்டி

புதுடெல்லி, ஜூலை 7- மீண்டும் அவசர நிலை கொண்டு வரப்படுமா? என்ற கேள்விக்கு பிரதமர் ராஜீவ் காந்தி பதிலளித்தார்.

பிரதமர் ராஜீவ் பதவியேற்று ஆறு மாதம் ஆனதைத் தொடர்ந்து இன்று டெல்லியில் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார்.

பேட்டிவிவரம் தொலைக்காட்சியிலும், வானொலியிலும் அப்படியே முறையே ஒளிஒலிபரப்பப்பட்டது.

கேள்விகளுக்குப் பதிலளித்து பிரதமர் ராஜீவ் கூறியதாவது:—

கடந்த சிலவருடங்களுடன் ஒப்பிடும் போது தற்போது பணவீக்கம் குறைந்துள்ளது. கடந்த மூன்று மாதங்களில் பணவீக்கம் 3.1 சதவீதம்தான்.

ஜவகர்லால் நேரு, இந்திரா காந்தி ஆகியோர் அமைத்துத்தந்த அடிப்படை பொருளாதாரக்கொள்கையிலிருந்து அரசு மாறாது

தீவிர வாதிகளாகட்டும் அல்லது வேறுயாராகட்டும் அவர்களின் மிரட்டல்களுக்கு இந்தியா பணியாது.



### ஊழல் புகார்

அரியானா முதல்வர் பஜன்லால் மீது எதிர்கட்சிகள் கூறியுள்ள ஊழல் புகார்கள் முகாந்திரம் உள்ளவையாக இருந்தால் அது பற்றி விசாரணை நடத்துவது பற்றி அரசு முடிவு எடுக்கும்.

அப்படி அவசியம் ஏற்பட்டால் கடந்த காலங்களில் கடைபிடிக்கப்பட்டது போல முதல்வரிடம் அதுபற்றி கருத்துக் கேட்கப்படும்.

தாழ்த்தப்பட்ட மலைவாழ் மக்களுக்கு இட ஒதுக்கீடு முறை தொடர்ந்து நீடிக்கும் அதில் எந்தபிரச்சனையும் இல்லை. அதில் மாற்றமோ திருத்தமோ கிடையாது.

### கூடுதல் பொறுப்பு

மத்திய அமைச்சரவை முழு அளவில் அமைந்துள்ளது அமைச்சகங்களின் பணிகளில் எந்தத்தவறும் இல்லை மூத்த அமைச்சர்கள் கூடுதலான பொறுப்புக்களை வகிப்பதில் எந்தத்தவறும் இல்லை.

எல்லா நாடுகளுடனும் குறிப்பாக அண்டை நாடுகளுடன் சகஜ உறவு கொள்ளவே இந்தியா விரும்புகிறது.

பாகிஸ்தானுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ள இந்தியா விரும்புகிறது.

துரதிர்ஷ்டவசமாக சில கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன.

இந்த வேறுபாடுகள் சரிபடுத்தப்பட்டுவிடும் என்று இந்தியா கருதுகிறது. சமீபத்தில் இரு நாடுகளுக்கும் இடையே நடந்த பேச்சு வார்த்தைகள் பொதுவான உறவுகளை வலுப்படுத்துவதாக அமைந்துள்ளது.

உலகம்தழுவிய ஒரே கருத்து உருவானாலன்றி தீவிரவாதிகளின் நடவடிக்கைகளை தடுப்பது சிரமம்.

சில நாடுகள் தீவிரவாதிகளின் நடவடிக்கைகளை எதிர்ப்பதாகக் கூறிக் கொண்டே தீவிரவாதிகளுக்கு மறைமுகமாக ஆதரவு கொடுக்கிறது.

### புதிய கல்வி கொள்கை

புதிய கல்விக்கொள்கை இரண்டு மாதங்களில் தயாராகிவிடும்.

அணு ஆயுத தடுப்புக்கு இந்தியா புதிதாக முயற்சி எடுத்துள்ளது இந்திய விமானங்களில் பயணம் செய்யும் பயணிகளுக்கு முழு பாதுகாப்பு அளிக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

இந்து— சீக்கியர் ஒற்றுமையைப் பலப்படுத்த லோங்கோவால் எடுத்துள்ள நடவடிக்கைகள் பாராட்டுக்குரியவை.

அமைச்சர்கள் கூடுதல் பொறுப்புகளுடன் (இலாகாக்களுடன்) செயல்படுவதில் எந்தத் தவறும் இல்லை.

### அவசரநிலை

பத்துஆண்டுகளுக்குமுன் எனது தாயார் அவசர நிலைப்பிரகடனம் செய்தார். அப்போது அது சரியான நடவடிக்கையாகும்.

அதேபோன்ற நிலைமை மீண்டும் உருவானால் அவசர நிலை வருவது அவசியமாகும்.

அப்படிப்பட்ட நிலைமை இப்போது உருவாகவில்லை.

அவை தவிர்க்கப்பட்டால் கடுமையான நடவடிக்கைகள் (அவசர நிலை) வருவதை நான் ஆதரிக்கவில்லை.

தொலைக்காட்சி, வானொலி ஆகியவற்றுக்கு முழு சுயாட்சி வழங்க அரசு தயாரில்லை

கட்சி மாறல் தடுப்புச் சட்டத்திற்கு விரோதமாக பிறகட்சிகளிலிருந்து எங்கள் கட்சியில் யாரையும் சேர்க்கக் கூடாது என்று காங்கிரஸ் அமைப்புகளுக்குக் கூறி இருக்கிறோம்.

### குரோமிகோ

சோவியத் அதிபராக குரோமிகோ தேர்வுபெற்றிருப்பது இந்திய— சோவியத் நட்புறவு மேலும் வளர வழி கோலும்.

காஷ்மீர் முதல்வர் ஜி. எம். ஷாவுக்கு இ. காங்கிரஸ் கொடுத்து வந்த ஆதரவை வாபஸ் பெறவில்லை. தொடர்ந்து ஆதரவு நீடிக்கும்.

### கலாச்சார மையம்

நாடு முழுவதிலும் கலாச்சார மையங்கள் அமைக்க மத்திய அரசு விரும்புகிறது.

பத்திரிகைகளுக்கு கட்டுப்பாடு விதிக்க அரசு விரும்பவில்லை. பத்திரிகையே கட்டுப்பாடுகளை வகுத்துக்கொள்ள வேண்டும்,

### சத்துணவு

சத்துணவு திட்டம், மலிவு விலை அரிசி திட்டம் போன்ற திட்டங்கள் பற்றி மத்திய அரசும் மாநில அரசுகளும் கவனிக்க வேண்டியுள்ளது.

அந்த திட்டங்கள் அவசியமானவை. தேவையானது.

ஆனால் அவை உற்பத்தி திறன் கொண்டதல்ல, திருப்பி லாபம் ஏதும் பிரதி பலனாக வருவதில்லை. எனவே திருப்பி பலன்தரத்தக்க திட்டங்களுடன் ஒத்துப் போனதாக அப்படிப்பட்ட "பிரபல" திட்டங்கள் அமையவேண்டும்.

இவ்வாறு பிரதமர் ராஜீவ் கூறினார்.

### இரு பதவியும் எப்படி?

பிரதமர், காங்கிரஸ் தலைவர் ஆகிய இரு பதவிகளையும் ஏற்றிருப்பதால் உள்ள நிலைபற்றி பிரதமரிடம் நிருபர்கள் கேட்டனர்.

அதற்குப் பிரதமர் பதிலளிக்கையில் நான் மிகவும் திருப்தியுடன் இருக்கிறேன் என்றார். இருபதவிகளையும் வகிப்பதில் உங்களுக்கு திருப்தி உள்ளதா என்று ஒரு நிருபர் கேட்டார்.

உடனே பிரதமர் சிரித்துக் கொண்டே, ஆமாம் நான் முழு திருப்தியுடன் பணியாற்றுகிறேன் என்று பதிலளித்தார்.

கட்சி ஸ்தாபன தேர்தல் விரைவில் நடக்க இருப்பதாகவும் அவர் கூறினார்.

## பஞ்சாபில் தேர்தல் பற்றி பிரதமர் ராஜீவ்

புதுடெல்லி, ஜூலை,7- பஞ்சாபில் எப்போது தேர்தல் நடை பெறும் என்ற கேள்விக்கு பிரதமர் பதில் அளித்தார்.

இன்று டெல்லியில் நிருபர்களிடம் பேசிய அவர் பஞ்சாபில் அக்டோபர் 6-ந்தேதிக்குள் தேர்தல் நடத்த வேண்டும் என்பதே என் விருப்பம் என்றார், அப்படி நடந்து விட்டால் குடியரசு தலைவர் ஆட்சி அங்கு நீடிக்கப்பட வேண்டியதிருக்காது.

ஆனால் இப்போதுள்ள சூழ்நிலையில் அங்கு அக்டோபருக்குள் தேர்தல் நடத்துவது கடினமே. எனவே மேலும் அங்கு குடியரசுத்தலைவர் ஆட்சி நீட்டிக்கப்பட நேரிடும் என்றும் பிரதமர் பதில் அளித்தார்.

தீவிரவாத இயக்கத்தை இந்தியா கடுமையாக எதிர்க்கும் என்றும், அதை ஒழிக்க அனைத்து நடவடிக்கைகளும் எடுக்கப் படும். என்றார்.

பொற்கோயிலில் தீவிரவாதிகள் அடைக்கலம் புகுவதை ஒருபோதும் அனுமதிக்க மாட்டோம். ஆரம்பக் கட்டத்திலேயே அதை முறியடிப்போம். அத்தகைய போக்கை அரசு இரும்புக்கரம் கொண்டு ஒடுக்கும் என்றும் பிரதமர் தெரிவித்தார்.

### விமானங்களில் பாதுகாப்பு

விமானப் பயணிகளுக்கு தக்கப் பாதுகாப்பு அளிக்க தீவிர நடவடிக்கை எடுக்கப் பட்டிருப்பதாகவும் இதற்கென தனி போலீஸ்படை அமைக்கப்படும் என்றும் கூறினார்.

இந்தியவின் உள்நாட்டு மற்றும் வெளிநாட்டு விமானங்களில் கடும்பாதுகாப்பு நடவடிக்கைகளை அரசு எடுத்துள்ளது. பயணிகள் பாதுகாப்புக்கென சில புதிய பாதுகாப்பு நடவடிக்கைகளை அரசு எடுத்திருக்கிறது. இருப்பினும் அவ்வப்போது மாறி வரும் நிலைமைகளுக்கு ஏற்ப இந்த நடவடிக்கைகள் பற்றி பரிசீலிக்கப் படும் என்றும் பிரதமர் தெரிவித்தார்.

### லோங்கோவாலுக்கு பாராட்டு

பஞ்சாபில் அமைதி நிலவ அகாலிகள் கட்சித் தலைவர் லோங்கோவால் விருப்படியான நடவடிக்கைகளை எடுத்து வருகிறார். அதற்காக அவரை நான் மானதாரப்பாராட்டுகிறேன் என்று ராஜீவ் குறிப்பிட்டார்.

அங்கு முழு அமைதி நிலவ லோங்கோவால் ஆவன செய்வார் என்று தாம் எதிர்பார்ப்பதாகவும் பிரதமர் குறிப்பிட்டார்.

பஞ்சாபில் இப்போது முன்பிருந்த பதட்டநிலை இல்லை. பஞ்சாப் மக்கள் அமைதியை விரும்புகின்றனர் அகாலிகளும் பேச்சுவார்த்தை மூலம் பிரச்சினைகளை தீர்த்துக்கொள்ள முன்வந்துள்ளனர். பயங்கரவாதத்தை அவர்களும் எதிர்க்கின்றனர்.

பொற்கோவில்போன்ற புனிதமான இடங்களில் எக்காரணத்தைக் கொண்டும் தீவிரவாதிகள் அடைக்கலம் புகுவதை அரசு ஒருபோதும் அனுமதிக்காது. அத்தகைய நடவடிக்கைகளை ஆரம்பத்திலேயே கிள்ளி எறிவோம்.

இவ்வாறு பிரதமர் கூறினார்.

### சோலங்கி மத்திய அமைச்சர்?

அடுத்த பாராளுமன்றக் கூட்டத் தொடருக்குள் அமைச்சரவை விரிவுப் படுத்தப்படலாம் என்றார் அவர்.

சோலங்கி அமைச்சரவையில் இடம் பெறுவாரா? என்று கேட்டதற்கு இருக்கலாம், என்று பிரதமர் கூறினார்.

## 'இது எங்கள் எம்.ஜி.ஆர். ஆட்சி'

சென்னை, ஜூலை 7— சென்னை பட்டினப்பாக்கத்திலிருந்து அண்ணா நகருக்கு 41-ஏ பஸ் வந்துகொண்டிருந்தது

கட்டிடத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பெண்கள் அண்ணா நகர் செல்வதற்காக ஆழ்வார் பேட்டையில் பஸ் ஏறினர்.

அரசு பஸ்களில் பின் பகுதிகளில் உள்ள கடைசி வரிசை இருக்கைகள் பெண்களுக்காக ஒதுக்கப்பட்டதாகும். அந்த நீண்ட வரிசையில் ஆட்வர்கள் உட்கார்ந்திருந்தார்கள்

இது நாங்கள் உட்காரும் சீட். எனவே எழுந்திருங்கள் என்று அந்தப் பெண்கள் கோரினா. உட்கார்ந்திருந்த எந்த ஆடவரும் எழுந்திருப்பதாகத் தெரியவில்லை.

மீண்டும் பெண்கள் கோரினர்.

உட்கார்ந்திருந்த ஒரு ஆடவர் சொன்னார். 'ஏம்மா! ஆண்களைக் கண்டால் பெண்கள் மரியாதையோடு எழுந்திருப்பார்கள். நீங்களோ ஏட்டிக்குப் போட்டியாக எங்களையேஎழுந்திருக்கச் சொல்கிறீர்களே' என்று கேட்டார்.

'அது அந்தக்காலமய்யா எங்களுக்கு உட்கார இடம் கொடுங்கள்' என்று ஒரு பெண் கோரினார்.

'ஆமாம்! எழுந்திருங்கள்' என்று மற்ற பெண்களும் கோஷமே எழுப்பி விட்டனர்

அப்போதும் அந்த ஆடவர்கள் எழுந்திருப்பதாக இல்லை

''என்னம்மா இப்படி சொல்றீங்க? இன்றைக்கு கிராமப்புறங்களில் ஆண்களைக்கண்டால் பெண்கள் தான் எழுந்திருக்கிறார்கள் என்று சொன்னார் அந்தகிராமத்துபொண்ணுங்களுக்குஇன்னும் விபரம் தெரியல்லே ஆம்பிளைங்களுக்கு மரியாதைகொடுக்க வேண்டிய இடத்திலே கொடுக்க வேணும் இல்லேன்னு சொல்லல்லே ஆனா இப்போ நடக்கிறது, எம். ஜி. ஆர். ஆட்சி எம்.ஜி.ஆர். ஆட்சியின்னா தாய்க்குலத்தின் ஆட்சி அய்யா! பஸ்சில் இந்தப் பின் வரிசையில் பெண்கள்தான் உட்காரவேணும்னு எம்.ஜி.ஆர். சொல்லியிருக்காரு. உங்க தலைக்கு மேலே பாருங்கள், பெண்கள் என்று எழுதியிருக்கு. எழுந்திருங்கய்யா'' என்று அந்த பெண் கூறினார். அவ்வளவுதான். அதுவரை அடம்பிடித்து உட்கார்ந்திருந்த ஆண்கள் மளமளவென்று எழுந்து விட்டனர்.

## டாக்டர் - என்ஜினீயர் ஆக 10 ஆயிரம் பெண்கள் ஆர்வம்

சென்னை, ஜூலை 7— டாக்டர்களாகவும் என்ஜினீயர்களாகவும் வருவதற்கு தமிழகத்தில் சுமார் 10 ஆயிரத்துக்கும் மேற்பட்ட பெண்கள் இந்தக் கல்லூரிகளில் சேர விண்ணப்பித்திருக்கிறார்கள்.

பொதுவாக கல்லூரிகளில் விண்ணப்பம் செய்துள்ள மாணவ மாணவிகளின் எண்ணிக்கை இந்த ஆண்டும் பெரும்அளவுக்கு உயர்ந்துள்ளது,

ஆண்களுடன் பெண்களும் போட்டி போட்டுக் கொண்டு விண்ணப்பம் செய்துள்ளனர்.

மருத்துவக் கல்லூரி, பொறியியற் கல்லூரி வேளாண்மைக் கல்லூரி ஆகியவற்றில் சேர ஏராளமானவர்கள் விண்ணப்பம் செய்துள்ளனர்.

இதில் பெண்களின் எண்ணிக்கை கணிசமான அளவு உயர்ந்துள்ளது.

சுமார் 10 ஆயிரத்துக்கும் மேற்பட்ட பெண்கள் டாக்டர்களாகவும், என்ஜினியர்களாகவும் வருவதற்கு ஆர்வத்துடன் விண்ணப்பம் செய்துள்ளனர்.

'என்ஜினீயர்களாக வருவதற்கு இந்த ஆண்டு பதிவு செய்தவர்களின் மொத்த எண்ணிக்கை 13 ஆயிரத்து 866. இதில் 3 ஆயிரத்து 9 பேர் பெண்கள் மருத்துவக்(டாக்டர்) கல்லூரியில் படிக்க தங்கள் பெயர்களை பதிவு செய்தவர்களின் எண்ணிக்கை 0 ஆயிரத்து 2 இதில் பெண்களின் எண்ணிக்கை 4 ஆயிரத்து 97 வேளாண்மைக் கல்லூரியில் சேர பதிவு செய்த 7 ஆயிரத்து 132ல் பெண்களின் எண்ணிக்கை 2 ஆயிரத்து 19.

இந்த ஆண்டில் தான் இதுவரையில்லாத வகையில் அதிகமான பெண்கள் பொறியாளராகவும், டாக்டர்களாகவும், வேளாண்மைத்துறை விஞ்ஞானிகளாகவும் வருவதற்கு ஆர்வம் காட்டியிருக்கிறார்கள்.

சென்ற ஆண்டில் பொறியியற் கல்லூரியில் சேர்ந்த மாணவ மாணவிகளில் 44 சதவிகிதத்தினர் பெண்கள்,

கல்லூரிகளில் சேர்வதற்கான நுழைவுத் தேர்வை அண்ணா பல்கலைக்கழகம் நடத்துகிறது.



### திட்டம்

செயல்முறைக்குஒத்து வருவதாயும், மக்களுக்குப் பலனை விரைந்து தருவதாயும் திட்டங்கள் இருக்க வேண்டும்.

—பேரறிஞர் அண்ணா



### உணர்ச்சி

உணர்ச்சிவயப்படுவது எளிது. ஆனாலும் அதை சரி என்றோ, தவறு என்றோ கூற முடியாது. சி.தித்து உறுதியாக செயல்படுவதுதான் சரியானது.

—தந்தை பெரியார்

# சத்துணவு திட்டம்: ஆராய்ச்சி நடத்த ஆர்எம்வீ. வேண்டுகோள்

சென்னை, ஜூலை 7- சத்துணவு திட்டம் பற்றி ஆராய்ச்சி நடத்த வேண்டுமென்று அமைச்சர் ஆர். எம். வீ. வேண்டுகோள் விடுத்தார்.

தமிழ்நாடு அரசியல் விஞ்ஞான கழக மாநில மாநாடு சென்னை பச்சையப்பன் கல்லூரியில் நேற்று நடைபெற்றது.

இந்த மாநாட்டிற்கு தலைமை வகித்து அமைச்சர் ஆர். எம். வி. மாநாட்டைத் தொடங்கி வைத்தார். அகில இந்திய அரசியல் விஞ்ஞான கழக தலைமை பேராசிரியர் பெருமாள் பற்றிய பாராட்டு சிறப்பு மலரை அமைச்சர் ஆர். எம். வீ. வெளியிட்டார்.

முதல் பிரதியை அரசு போக்குவரத்துத்துறை கமிஷனர் காசிராஜன் பெற்றுக்கொண்டார்.

விழாவில் அமைச்சர் ஆர். எம். வீ. பேசுகையில் கூறியதாவது:-

பேராசிரியர் பெருமாளைப் பற்றி இத்தனை பேர்கள் இத்தனை கோணங்களில் ஆய்வு செய்து கட்டுரை வழங்கி உள்ளார்கள் என்றால் அவர் எவ்வளவு பாராட்டுக்கு உரியவர் என்பது புரியும் மனதில் உள்ளதை வெளியே சொல்லிவிடுவார்.

## புறம் பேசாதவர்

உள்ளொன்று வைத்து புறமொன்று பேசத் தெரியாதுஎன்றுகுறிப்பிட்டார்கள். நானும் அந்தஜாதியை சேர்ந்தவன் தான்,

இந்தமாநாட்டில் அரசியல் பற்றியும், ஆட்சியை பற்றியும் விவாதிக்கப்பட இருக்கிறது என்று கூறினார்கள்.

அரசியல் ஆனாலும்சரி, ஆட்சி என்றாலும் சரி, கல்வி என்றாலும் சரி எந்தஉணர்வோடு அணுகப்படுகிறது என்று அறிஞர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் செய்கிற ஆராய்ச்சி யாருக்காக என்பதை தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த நாட்டில் 55-சதவீதத்துக்கு மேல் படிப்பில்லாதவர்கள் எழுத்தறிவு இல்லாதவர்கள் இருக்கிறார்கள். உங்கள் ஆராய்ச்சி படித்தவர்களுக்கும்உயர்லட்டத்தில் உள்ளவர்களுக்கும் மட்டும் பயனளிப்பதாக இருந்தால் அதில் பயன் இல்லை.உங்கள் ஆராய்ச்சியின் முடிவுகள் பெரும்பான்மையான மக்களுக்கு பயன் அளிக்கும் வகையில் இருக்கவேண்டும்.

## தமிழுணர்வு வேண்டும்

அரசியலில்இருந்துதான் ஆட்சி அமைகிறது. அரசியலில் எப்படிப் பட்டவர்கள் இருக்க வேண்டும்எந்தஉணர்வோடு இருக்க வேண்டும். என்று ஆராய வேண்டும்.

அறிவு என்பது வேறு உணர்வு என்பது வேறு விஞ்ஞான அறிவை பெற்றதால் மட்டும் ஒருவன் விஞ்ஞானியாகி விட முடியாது. விஞ்ஞான உணர்வோடு செயல்பட வேண்டும்.

தமிழ் அறிவு இருந்தால் மட்டும போதாது. தமிழ் உணர்வு வேண்டும் இந்த இரண்டையும் இணைத்து பார்க்க வேண்டும்.

அரசியல்என்பது இன்று வாழ்க்கையிலிருந்து பிரிக்கமுடியாததொன்றாகும் இது எங்கு தொடங்குகிறது? எங்கு முடிகிறது? என்று ஒளிவுமறைவுஇல்லாமல் விவாதியுங்கள்.

அரசியல் வாதிகள்விமர்சனத்துக்கு ஆளாகிறார்கள். யாருக்கோ மகிழ்ச்சி அளிப்பதற்காக எடுத்ததெற்கெல்லாம் அரசியல் மூலாம் பூசி அரசியல்வாதிகளைஇழிவுபடுத்தும் நாகரிகம் வளர்ந்து வருகிறது.

அரசியல் என்பது ஜனநாயகத்தின் ஆணி வேராகும்.

இன்று வளர்ந்திருக்கும் முறை ஆரோக்கியமான முறையா? மாற்றப்பட வேண்டிய முறையா என்று ஆராய்ச்சி செய்யுங்கள்.

அரசியல்வாதிகளுக்கு நாம் கொடுக்கவேண்டிய மரியாதை என்ன?அதைப் பெறுவதற்கு அவர்கள் எப்படி இருக்க வேண்டும் என்று பாருங்கள்.

உலகில் ஜனநாயக அறிவுஎப்படி இருக்கிறது. அதை ஒப்பிடும் போது நமது மக்களின் ஜனநாயக அறிவு அதிகமாக இருக்கிறதா? குறைவாக இருக்கிறதா? நடந்து முடிந்ததேர்தலில்இந்திய மக்கள் அளித்திருக்கும் முடிவு, எந்த நாட்டிலும் இல்லாதஅளவுக்கு சிறந்த முடிவை எடுத்திருக்கிறார்களா? இவர்களெல்லாம் உயர்ந்தவர்களா? தாழ்ந்தவர்களா?

வாக்களித்தவர்கள் எல்லாம் ஒன்றும் தெரியாதவர்கள் என்றுதோற்றவர்கள் கூறுகிறார்களே! இதெல்லாம் பற்றி ஆராய வேண்டும்.

அரசியலை விஞ்ஞான உணர்வோடு ஆராயவேண்டும்சிலவற்றை மக்குதெரியாத போது மூடநம்பிக்கை என்று சொல்லி விடக்கூடாது.

எந்த ஆராய்ச்சி நடத்தினாலும் 60 சதவீத மக்களை மனதில்வைத்து ஆராய்ச்சி நடத்துங்கள் பாமரமக்கள்என்று தள்ளி விடாதீர்கள். இவர்களை போல ஆற்றல்மிக்கவர்கள் எங்கும் கிடையாது,

இந்த மக்கள் எப்படிப் பட்ட நேரத்தில் தீர்ப்பு அளிக்க வேண்டும் என்று தெரிந்தவர்கள். யாரையும் அவர்கள் கண்ணை மூடிக்கொண்டு தேர்ந்தெடுத்து விடுவதில்லை. கிராமத்திலுள்ள குப்பாயிடம்போய் எதற்காக புரட்சித் தலைவருக்கு ஓட்டு போட்டாய்; என்றுகேட்டால் 'புண்ணியவான் எங்களை எல்லாம் வாழ வைக்கிறார் என்று கூறுவார்.

## ஏழைகளின் இதயமறிந்தவர்

200 கோடி ரூபாய் செலவில் சத்துணவு வழங்குகிறார் புரட்சித் தலைவர். இத்திட்டத்தின் மூன்பாக 83 லட்சம்பேர் சூடாக சாப்பிடுகிறார்கள். இந்த திட்டம் எப்படி நடத்தப் படுகிறது? இதன் பலன்கள் என்ன? என்பதுபற்றி ஆராய்ச்சி நடத்தவேண்டும்.

கடந்த 6 ஆண்டுகளாக பலகோடிரூபாய்அரசுக்கு இழப்பு ஏற்பட்டாலும் ஒருகிலோ அரிசி 1 ரூபாய் 75 காசுக்கு விற்கப்படுகிறது, அரிசி விலை ஏறாமல் அரசு பார்த்துக் கொள்கிறது,இது எப்படி முடிகிறது.

புரட்சித்தலைவர் எந்த கல்லூரியிலும் பொருளாதாரம் படித்தவரல்ல.

ஆனால் ஏழைகளின் இதயத்தைத் தெரிந்தவர் வறுமை என்ன? வறுமையின் கொடுமை என்ன? என்பதைத் தெரிந்தவர்,

மக்களின் வாழ்க்கை முறைக்கும், நமது படிப்புக்கும் தொடர்பு இருக்கிறதா என்று ஆராய்ச்சி நடத்த வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ.பேசினார். விழாவில்பேராசிரியர்கள் பெருமாள், தாண்டவன் அனந்தசயனம், மற்றும் எஸ்டி. காசிராஜன், சைதை துரைசாமி உள்பட பலரும் பங்கேற்றனர்

# தொழில் நுட்பக்கல்விக்கு ரூ 650 கோடி ஒதுக்கீடு டாக்டர் நாவலர் தகவல்

வேலூர்,ஜூலை,7— தமிழ்நாட்டில் அறிவியல் மற்றும் தொழில் நுட்பத்துக்கென650 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது என்று நிதி அமைச்சர்டாக்டர் நாவலர் தெரிவித்தார்.

அறிவியல் மற்றும் தொழில் நுட்பக்கல்விக்கு தமிழ் நாட்டில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது என்றும் அதனால் தான் இதற்கென 650 கோடி ஒதுக்கப்பட்டிருப்பதாகவும்அவர்கூறினார்.

வடஆற்காடு மாவட்ட ஆசிரியர்கள் சார்பில் மூன்றாம் முறையாக கல்வி அமைச்சராகப் பொறுப்பேற்றுள்ள அமைச்சர் அரங்கநாயகத்துக்கு பாராட்டு விழா நடைபெற்றது.

இவ்விழாவில் பேசிய நாவலர் சமுதாயத்தில் ஆசிரியர்கள் ஆற்றவேண்டிய பணிகளின் முக்கியத்துவத்தைவலியுறுத்தினார்

பாராட்டுக்கு நன்றி தெரிவித்து அமைச்சர் அரங்கநாயகம் பேசினார் மாற்றப்பட்டிருக்கும் ஆரம்பபள்ளி ஆசிரியர்கள் மீண்டும்ஊராட்சி ஒன்றிய நிர்வாகத்தின் கீழ் கொண்டு வரப்படுவார்கள் என்றுதெரிவித்தார்.

# பட்டு உற்பத்தி தொழில் வளர ஊக்கம் அவசியம்

### ஆற்காடு பழனி வலியுறுத்தல்

சென்னை, ஜூலை 7— பட்டுத் தொழில் வளர ஊக்கம் அளிக்க வேண்டும் என்று சட்டசபையில் ஆற்காடு பழனி வலியுறுத்தினார்.

கழக உறுப்பினர் ஆற்காடு பழனி பேசுகையில் கூறியதாவது:-

சிட்கோ போன்று "டால்கோ" என்றுதோல் தொழிலுக்காக ஏற்படுத்தப்பட்டிருப்பதை வரவேற்கிறேன்.

அரசு தோல்தொழிற்சாலையையும் டால்கோ கட்டுப்பாட்டில் கொண்டு வர இருப்பதாக கூறியிருப்பது பாராட்டுக்குரியது.

## கழிவு நீர் பாதகம்

புதிதாகதோல்தொழிற்சாலை துவங்கினாலும், இருக்கிற தொழிற்சாலைகளானாலும் அதிலிருந்து வருகிற கழிவு நீரால் விவசாய நிலங்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றன. குடி நீர் பெருமளவு பாதிக்கப்பட்டுள்ளது. அதனை போக்கும் வகையில் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

தமிழகத்தில் ஏராளமான பட்டு உற்பத்தி செய்யும் விவசாயிகள் இருக்கின்றனர். அந்த தொழிலை அரசு மேலும் ஊக்குவிக்க வேண்டும். மாநிலஅளவிலான பட்டு மார்க்கெட்டிங் சொசைட்டி அமைக்க வேண்டும்.

தமிழகத்திலுள்ள விவசாயிகள் உற்பத்தி செய்யும் பட்டுக்கு நியாயமான விலை கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்,

இவ்வாறு பழனி கூறினார்.

# 13 வயதில் எம். ஏ. பட்டம் பெற்ற பெண்

லண்டன் ஜூலை 7- இங்கிலாந்தில் 13வயது பெண் ஒருத்தி ஹானர்ஸ் பட்டம் பெற்றாள், உலகிலேயே இந்த வயதில் ஹானர்ஸ் பட்டம்பெற்றவள் இவள்தான்.

இங்கிலாந்தை சேர்ந்த ருத் லாரன்ஸ் என்ற 13 வயது பெண்ணுக்கு ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் கடந்த வியாழக்கிழமையன்று கணிதத்திற்கான ஹானர்ஸ் பட்டத்தை வழங்கியது.

குமாரி லாரன்ஸ் பள்ளிக்குச் சென்று படிக்காமலேயே பல்கலைக்கழகத்தில் இந்தப்பட்டத்தைப் பெற்றுள்ளாள்.

அவளது கணித திறமையைக் கண்ட அவள் தந்தை கம்ப்யூட்டர் கல்வி மூலம் கல்வி கற்று கொடுத்தார் அவள் தனது 10-வயதில் கல்லூரிபட்டப் படிப்புகளை முடிந்துவிட்டார்.

நான் ஒரு மேதைஎன்று நினைக்கவில்லை என்னுடைய இந்த வெற்றிக்கு என் கடுமையான உழைப்புத்தான் காரணம் என்று குமாரி லாரன்ஸ் நிருபர்களிடம் கூறினாள்,

# இந்தியைத் திணிக்க மாதிரிப்பள்ளிகளா?: அரங்கநாயகம் தாக்கு

ஐதராபாத், ஜூலை 7- இந்தியைத் திணிக்கவே மத்திய அரசு மாதிரிப் பள்ளிகளை ஏற்படுத்துகிறதோ என்ற ஐயம் ஏற்பட்டுள்ளது என தமிழக கல்வி அமைச்சர் அரங்கநாயகம் கவலை தெரிவித்தார்

7-வது ஐந்தாண்டு திட்டகாலத்தில் மாவட்டத்துக்கு ஒரு மாதிரிப் பள்ளியை நிறுவ மத்திய அரசு முனைந்துள்ளது.

அப்பள்ளிகளில் இந்தியும் ஆங்கிலமும்போதனா மொழியாக்கப்பட்டுள்ளது. இதை மாற்றி அந்தந்த மாநில மொழிகளே போதனா மொழியாக்கப் படவேண்டும் என்றும் அரங்கநாயகம் யோசனை தெரிவித்தார்.

கல்வியை மத்திய அரசு பட்டியலில்இருந்துமாநில அரசு பட்டியலுக்கு மாற்ற வேண்டும் என்றும் அவர் மத்திய அரசை வலியுறுத்தினார்

தென் மாநில கல்வி அமைச்சர்கள் கூட்டம் ஐதராபாத்தில்நடைபெற்றது. இதைத்தொடங்கி வைத்து அரங்கநாயகம் பேசினார்.

## கேரள அமைச்சர்

கேரள மாநில கல்வி அமைச்சர் டி.என் ஜாகப் பேசுகையில் குழந்தைகள் திரைப்படம் மற்றும் இலக்கியங்களை உருவாக்க தென் மாநிலங்கள் ஒரு கூட்டு அமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

ஆந்திர மாநில கல்வி அமைச்சர் ஜி.எர்.கே நாயுடு வரவேற்றுப் பேசுகையில், தென் மாநிலங்களுக்கென ஐதராபாத்தில் பல்கலைக்கழக மான்யக் குழுவின் கிளையை ஏற்படுத்த வேண்டும்என்று யோசனை தெரிவித்தார்.

# பஞ்சாப் மாநிலத்தில் ஒரு குட்டித்தமிழகம்

புதுடெல்லி ஜூலை 7- பஞ்சாப் மாநிலம் ஜலந்தா நகரின் மையப் பகுதியில் ஒரு குட்டித் தமிழகம் அமைந்துள்ளது. இதை குட்டித் தமிழகம் என்று சொல்வதற்குப் பதில் "ஒரு குட்டி சென்னை" என்று சொன்னாலும் பொருத்தமாகும்

சென்னை போன்ற நகரில் சில பகுதிகளில் இருப்பது போல ஜலந்தரில் உள்ள ரெயில்வே ஸ்டேஷனையொட்டி இந்த 'சென்னை" அமைந்திருக்கிறது.

சுமார் 300 தமிழ் குடும்பங்கள் குடிசை போட்டுக் கொண்டு ஜாம் ஜாம் என்று வாழ்க்கை நடத்துகிறார்கள்,

கடந்த பல ஆண்டுகளாக சரக்கு ரெயில்கள் நிற்கும் இடமான காசி மண்டியை யொட்டி நீண்டவரிசையில் குடிசைகள்அமைத்து வாழ்கிறார்கள்.

இந்தக் குடும்பங்களைச் சேர்ந்த ஆண்கள் பலூன் காகித ஊதுகுழல்கள், காகிதசெயற்கைகாதணி, மூக்குத்தி, மணி மற்றும் நகைகளை செய்து விற்கிறார்கள். பெண்களோ தெருத்தெருவாக சுற்றி பழைய காகிதங்களை சேகரிக்கிறார்கள். பழைய இரும்புத்தகடுகள், டின்கள் ஆகியவற்றையும் சேகரித்து மொத்தமாக விற்பனை செய்து பிழைக்கிறார்கள் இதுதான் இந்தக்குடும்பங்களின் முக்கிய வேலை வாய்ப்பு, வருமானம்.

இவர்களுக்குள்ளே சங்கம், அதற்கு தலைவர் செயலாளர் ஆகியோரும் உண்டு. ஒருவரின் சராசரி தின வருமானம் சுமார் 20 ரூபாய்.

தென்இந்தியஎளியோர் நல்வாழ்வுச்சங்கம் என்ற பெயரில் ஒரு சங்கத்தை அமைத்துக் கொண்டுள்ளனர்.

ஒரு ஆரம்பபள்ளி ஒரு மகமாயி அம்மன் கோவில் ஆகியவும் இந்தப்பகுதியில் கட்டப்பட்டுள்ளன.

இந்தக் கோவிலில் உள்ள அம்மன் சிலையும் தமிழ் நாட்டில் இருந்து கொண்டு வரப்பட்டது தான்.

இந்த ஆரம்பப்பள்ளிக்கு பஞ்சாப் மாநில அரசு 5 ஆயிரம் ரூபாய் மானியம் அளித்துள்ளது,பள்ளியில் மாணவர்களுக்கு இந்தி,தமிழ், மற்றும கணக்கு ஆகிய பாடங்கள் கற்றுக்கொடுக்கப் படுகிறது.

இங்குள்ளதமிழர்கள் பஞ்சாப் மொழியை நன்றாக தெரிந்து வைத்துக்கொண்டுள்ளனர். சில பஞ்சாபியர்கள், தமிழர்கள் ஆகியோர்க்கிடையே திருமணங்களும் நடைபெற்றுள்ளன.

பாரத ஸ்டேட் பாங்கு இந்தப்பகுதியை மதராஸ் காலனி என்று பெயரிட்டு அதை தத்து எடுத்துள்ளது.

பாங்கியில் இருந்து பெற்ற கடன் உதவிகளை இந்தத் தமிழ குடும்பங்கள் ஒழுங்காக திருப்பிச் செலுத்துகின்றன இதற்காக பஞ்சாப் மாநிலமுன்னாள் அமைச்சர் மனமோகன் காலியா பாராட்டியிருக்கிறார். யாராவதுகடன் உதவியை திரும்ப கட்டாமற் போனால் அங்குள்ள சங்கம் உடனடியாக முன் வந்து கடனை வங்கியில் செலுத்தி விடுகிறது. கடன் வசூல் ஜரூராக உள்ளது.

வாங்கினகடனை திருப்பிக் கொடுக்காதீர்கள் என்று சொல்வோர் மதராஸ் காலனியில் யாரும் இல்லை.

# புரட்சித்தலைவரிடம் ஆசிபெற்றார் கோடம்பாக்கம் குமார்

சென்னை, ஜூலை 7— தமிழ்நாடு பாடநூல் நிறுவனத் தலைவராக நியமிக்கப்பட்டுள்ள கோடம்பாக்கம் குமார் இன்று முதல்வர் புரட்சித் தலைவரை சந்தித்து ஆசி பெற்றார்.

அவருடன் நாஞ்சில் மணிமாறன் கவிஞர் மணிமொழி, நந்தனம் நம்பி, செய்தார் முதலியோர் உடன் சென்றனர்.

கோடம்பாக்கம் குமாருக்கு அமைச்சர் ராசாராம் வாழ்த்து தெரிவித்தார். முன்னாள் தலைவர் திருமதி சுலோசனா சம்பத்தையும் சந்தித்து வாழ்த்துப்பெற்றார்.

# காவிரி ஆற்றுபடுகையில் எண்ணெய் கிணறுகள்: ஆய்வுபணிகள் வெற்றி

சென்னை,ஜூலை7, காவேரிஆற்றுப் படுகையில் எண்ணெய் வளம் உள்ளது. அங்கே நடத்திய ஆய்வுப் பணிகள் நல்ல வெற்றியையும் நம்பிக்கையையும் கொடுக்கின்றன என்று எண்ணெய் மற்றும் இயற்கை வாயுக் கமிஷன் தலைவர் உறுதியுடன் கூறினார்.

எண்ணெய் மற்றும் இயற்கை வாயுக்கமிஷன் மேற்கொண்டுள்ள பல்வேறு ஆய்வு பணிகள்பற்றிய ஆலோசனை கூட்டம்

சென்னையில் நடைபெற்றது. கமிஷனைச் சேர்ந்த உயர் அதிகாரிகள் பலரும் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

கூட்டம் முடிந்ததும்மத்திய எண்ணெய் மற்றும் இயற்கைவாயுக் கமிஷன் தலைவர் எஸ். பி, வாஹி நிருபர்களிடையே பேசுகையில் கூறியதாவது:—

ஒரு நாட்டுக்கு எண்ணெய் வளம் மிகவும் முக்கியமானது. பெட்ரோலியத்துறை அமைச்சகத்துக்கு வரும் 7வது ஐந்தாண்டு திட்டத்திற்கான தொகை கணிசமான அளவு குறைக்கப்பட்டுள்ளது.

ஆயினும் எண்ணெய் கிணறுகள் பற்றிய ஆய்வு பணிகள் மற்றும் ஆராய்ச்சிகளுக்காக தேவைப்படும் நிதி உதவி அளிப்பதில்எந்தவிதமான தடங்கலும் ஏற்படாது.

தமிழகத்தில் உள்ள காவேரி ஆற்று நீர்படுகை கிருஷ்ணா, கோதாவரி படுகை அந்தமான் தீவுகள் ஆகிய இடங்களில் எண்ணெய் கிணறுகள் பற்றிய ஆய்வுப்பணிகள் தொடர்ந்து நடக்கின்றன.

## ஆய்வுப்பணி தீவிரம்

காவேரி ஆற்றுப்படுகையில் கடந்த மே மாதம் வரை 19 இடங்களில் ஆழ் கிணறு துரப்பண வேலைகள் நடந்தன. 10 இடங்களில் ஆய்வுப்பணிகளும் மேற்கொள்ளப்பட்டன. கடற்கரையை ஒட்டிய தரைப்பகுதியிலும், கடல் பகுதியிலும் 18 இடங்களில் ஆய்வுப்பணிகள் தீவிரமாக நடத்தப்பட்டன.

இந்த ஆய்வுப்பணிகள் நல்ல வெற்றியை ஏற்படுத்தியுள்ளன. அதிகஅளவில் எண்ணெய் கிடைக்கும்என்றநம்பிக்கை ஏற்பட்டிருந்தாலும் கிடைத்தஎண்ணெய் பற்றிய எல்லாஆராய்ச்சியும் நடத்தப்பட்டபிறகே ஒரு திட்டமான முடிவுக்குவர முடியும்.

இவ்வாறு வாஹி கூறினார். தஞ்சாவூர் அருகே உள்ள நரிமணம் என்ற இடத்தில் நடத்திய ஆய்வுப்பணிகள் பற்றிய கேள்வி ஒன்றுக்கு பதில் அளிக்கையில் வாஹி கூறியதாவது:

அங்கே ஆய்வு நடத்தி எண்ணெய்கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. கிடைத்த எண்ணெய் பற்றிய விஞ்ஞான சோதனைகள் நடைபெற்றுவருகின்றன.

இன்னும் ஒரு மாதத்தில் இந்த ஆராய்ச்சி முடிவடைந்தவிடும், அதன முடிவு நல்ல நம்பிக்கையைக் கொடுக்கும் என்றே கருதுகிறேன்.

## துரப்பண வேலை

தஞ்சை மாவட்டம் திருவாரூரிலும்எண்ணெய் கிணறு துரப்பண வேலை நடத்தப்பட்டன, தென் ஆற்காடு மாவட்டம் புவனகிரியில் இந்தஆண்டு துரப்பண வேலை நடத்தப்பட விருக்கிறது, அடுத்த ஆண்டிலும் மற்றொரு எண்ணெய்க் கிணறு துரப்பண வேலை நடக்கும்.

இவ்வாறு கமிஷன் தலைவர் வாஹி கூறினார்

கிருஷ்ணா, கோதாவரி ஆற்றுப்படுகையில் கிடைக்கும் எண்ணெயை பயன்படுத்தி எரிவாயு மூலம் மின்சாரம் உற்பத்தி செய்வதற்கான திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது, அந்த மின் நிலையம் அமைப்பதற்கான இடத்தை ஆந்திர அரசு தேர்வு செய்து வருகிறது என்றும் அவர் கூறினார்.

சேலம் மாவட்ட முன்னாள் இணைச் செயலாளர் கே. பி. செல்வராஜின் புதல்வி காந்திமதிக்கும் அண்ணாதுரைகும் திருமணம் நடைபெறறது.இவர்கள்முதல்வா புரட்சித் தலைவரைச் சந்தித்து ஆசி பெறறனா.



# ஜப்பான் பெண்ணின் கர்நாடக சங்கீத கச்சேரி

ச...ரி...க.. ம...ப என்று சப்தஸ்வரங்களை தேனில் குழைத்து தெவிட்டாத வகையில் கர்நாடகசங்கீத மழையைப் பொழிகிறார் ஒருஜப்பானியப்பெண்மணி 25 வயதான இந்த ஜப்பானியப் பெண்ணின் பெயர் செல்வி அகிகா நிஷியுசி.

ஏற்கனவே மேற்கத்தியரான ஜான்ஹிக்கின்ஸ் கர்நாடக சங்கீதம் பயின்று மேடைகளில் கச்சேரி செய்து வந்தார்.

இப்போது அந்தவரிசையில் இந்த ஜப்பானியப் பெண் இணைந்துள்ளார்.

கர்நாடக சங்கீதம்மேற்கையும் கவர்கிறது, கிழ்திசை நாடுகளையும் கவர்கிறது. இதற்கு எடுத்துக் காட்டுதான் இந்த ஜப்பான் பெண்மணி.

அழகிய கண்களும், கவர்ச்சியான வதனமும் கொண்ட அகிகா தனது தாயுடனும் தந்தையுடனும் 12வது வயதில் டெல்லி வந்தார். டெல்லி வந்த அகிகா இசைக் கச்சேரிகளுக்கும் நடன நிகழ்ச்சிகளுக்கும் பெற்றோருடன் சென்றார்.

## இசை மோகம்

இப்படி நிகழ்ச்சிகளில் பார்வையாளராகச் சென்ற அகிகாவுக்கு கர்நாடக இசை மீது ஒரு அழுத்தமான காதல் ஏற்பட்டு விட்டது.

கர்நாடக இசையைக் கேட்குமுன்பே அகிகாவுக்கு வயலின் வாசிக்கத் தெரியும். வயலினில்மேற்கத்திய இசை ஓசை எழுப்பி வாசிப்பார்.

டெல்லி வந்த அவர் கர்நாடக வழி இசையைவயலினில் கேட்டபோது அதன்மீது ஒரு கவர்ச்சி வந்துவிட்டது. ஆகவ வயலின் வித்துவான் டி என். கிருஷ்ணனது கச்சேரிக்கு அடிக்கடி செல்லத் தொடங்கினார்.

அதுமுதல் கர்நாடக இசை பயில பேரார்வம் கொண்டார்.

அவரது பெற்றோரும் அதற்கு உற்சாகம் அளித்து ஊக்கம் தந்தனர்

அந்த சமயத்தில் அவரது கல்லூரிப் படிப்பு முடிந்தது. கர்நாடக இசை மீது அளவு கடந்த காதல் கொண்ட அகிகா சென்னை வந்தார்.

சென்னையில்கர்நாடக இசைக் கல்லூரியில் ஒருகாலையும், ஸ்டெல்லா மேரிஸ் கல்லூரியில் மற்றோர்காலையும் வைத்து இரண்டிலும் கவனம் செலுத்தினார்.



## பட்டம்மாள் ஆலோசனை

இதற்கிடையே ஒரு நாள் சங்கீத மேதை டி. கே. பட்டம்மாளின் கர்நாடக இசையைக் கேட்டு அதிலேயே மூழ்கித்திளைத்துவிட்டார்.

அதுமுதல அகிகா டி. கே. பட்டம்மாளின் ஆலோசனையைப் பெறத் தொடங்கினதுகர்நாடக இசைத் தன்மையை வளர்த்துக் கொள்ள முற்பட்டு விட்டார்.

பட்டம்மாளை எனது தாயைவிடமேலானவராகவும்குருவாகவும்கருதுகிறேன் என்று அகிகா கூறினார்

நூற்றுக்கு மேற்பட்ட பாடல்களை கர்நாடக் இசையில் பாடக் கற்றுக் கொண்டார் அகிகா.

வர்ணம், கிருதி போன்றவற்றைப் பட்டம்மாள் பாணியில் பாடுகிறார்,

5 அண்டு காலமாகப் பாடிப்பாடிபயிற்சிபெற்று விட்டார்,

கிருதி, நிரவல், ஆலாபனை போன்றவைகளில் இந்தியப் பெண்ணின் இசைத்தன்மை பளிச்சிடுகிறது. ஜப்பானிய வாடையே தென்படுவதில்லை.

தன்னுடைய குரல் கர்நாடக இசைத் தன்மைக்கு ஏற்றதாக ஆக தினமும் பயிற்சி செய்ததாக அவர் கூறினார்.

பாட்லைப் பாடமுற்படும் போது அதன் பாவம்—பொருள் நோக்கம் அத்தனையையும் தெரிந்து அதை மனதில் பதிய வைத்துப் பாடுகிறேன் என்குறார்.

## இனிமை

அகிகா இப்போது தமிழையும் கற்று வருகிறார். இசைப்பாடல்களைப் புரிந்துகொள்ள கன்னித்தமிழோடு களி தெலுங்கையும், சமஸ்கிருதத்தையும் பயின்று வருகிறார்.

அகிகாவின் கர்நாடக இசைக்கச்சேரி பெங்களூரில் நடந்தபோது கரஒலி அரங்கத்தையே அதிர வைத்தது.

கல்யாணி, சாவேரி, கரகரப்பிரியா போன்ற ராகங்களை லாகவமாக கையாண்டுஇனிமையாகப் பாடினார்.

ஜப்பான் நாடு சென்று ஜப்பானில்கர்நாடக இசையை பரப்பப் போவதாக அகிகா முகமும் அசமும் மலர சொல்கிறார்.

# விடுதலை இயக்கத்தினர் பேச்சு நடத்த தனி விமானத்தில் பயணம்

**புதுடெல்லி, ஜூலை. 7- பூட்டான் தலைநகர் திம்புவில் நாளை நடைபெறும் மாநாட்டில் கலந்து கொள்ள இலங்கைத்தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினர் புதுடெல்லியில் இருந்து விசேஷ விமானத்தில் இன்று புறப்பட்டுச்செல்கிறார்கள். அதற்கான ஏற்பாடுகளை இந்திய அரசு செய்துள்ளது.**

இலங்கைத்தமிழர்களை இலங்கை ராணுவத்தினரும்,சிங்களவெறியர்களும் கொன்றுகுவித்துவருகிறார்கள். இலங்கைத்தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காண முதல்வர் புரட்சித் தலைவரின் வேண்டுகோளுக்கிணங்க,பிரதமர் ராஜீவ் காந்தி தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளார்,

அதன்படி இலங்கை அரசுக்கும், தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினருக்கும் இடையே பூட்டான் நாட்டுத் தலைநகர் திம்புவில் நாளை பேச்சுவார்த்தை நடைபெறுகிறது.

இந்தப் பேச்சுவார்த்தையில் கலந்து கொள்ள இலங்கை தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தைச் சேர்ந்த தலைவர்கள் இன்று புதுடெல்லியில் இருந்து திம்புவுக்குப் புறப்பட்டுச் செல்கிறார்கள்.

முன்னதாக விடுதலை இயக்கத்தலைவர்கள் புதுடெல்லியில் இந்திய அரசின் முக்கிய அதிகாரிகளை சந்தித்து ஆலோசனை நடத்தினார்கள்,

## ஜி. பி.யுடன் சந்திப்பு

மத்திய அரசின் வெளியுறவு கொள்கை வகுப்புக் குழுத்தலைவர் ஆர். பார்த்தசாரதியையும், வெளிவிவகாரத்துறை செயலாளர் ரமேஷ்பண்டாரி ஆகியோரையும் சந்தித்துப் பேசினர்.

தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தலைவா சபாதினம்,தமிழ் ஈழ விடுதலைப் புலிகள் இயக்கத்தை சேர்ந்த பிரபாகரன், மற்றும் பத்மநாபா, பாலகுமார் ஆகியோர் புதுடெல்லியில் நிருபர்களை சந்தித்து தங்களின் கருத்துக்களை விளக்கினார்கள்.

அவர்கள் அனைவரும் ஒருங்கிணைந்த நிலையில் நேற்று நிருபர்களிடம் பேசினார்கள்.

தங்கள் இயக்கங்களைச் சேர்ந்த தலா இரண்டு பிரதிநிதிகளும் திம்பு மாநாட்டில் கலந்து கொள்வார்கள் என்றும் அவர்கள் கூறினார்கள்,

தமிழர்விடுதலை இயக்கங்களின் சார்பில் பாலகுமார் மேலும் கூறியதாவது.

மாநாட்டில் கலந்து கொள்ள ஜெயவர்த்தனே அரசு அரசியல் தலைவர்கள் யாரையும் அனுப்பாமல் சட்ட நிபுணரை மட்டுமே அனுப்புகிறது. ஜெயவர்த்தனேவின்சகோதரர் ஹெக்டர் ஜெயவர்த்தனா சட்டநிபுணர்என்ற அடிப்படையில் கலந்து கொள்கிறார்.

போர் நிறுத்த ஒப்பந்தத்தை அடியோடு புறக்கணுத்துவிட்டு இலங்கைத் தமிழர்களை ஜெயவர்த்தனே அரசின் ராணுவம் இன்னும் இம்சித்து வருகிறது.

போர் நிறுத்த ஒப்பந்தத்தை இலங்கைஅரசு தீவிரமாக செயல்படுத்த வேண்டும் திம்பு மாநாட்டில் இதைத்தான் நாங்கள் பலமாக வலியுறுத்துவோம். வேறெந்த முன் நிபந்தனைகளுடன் நாங்கள் இந்த மாநாட்டில் கலந்து கொள்ளவில்லை.

மாநாட்டில் பேசப்படும் விவரங்களைக் கூட இலங்கை அரசு திரித்துக் கூறுகிறது. மக்களைத் திசை திருப்பவும் அது பார்க்கிறது. ராணுவத்தைக் கொண்டு இலங்கை தமிழர் பிரச்சினையைத் தீர்க்க அவர்கள் முயன்றார்கள். அது முடியவில்லை. அதனால் சில தந்திரங்களை கையாளுகிறார்கள்.

இலங்கைக்குவெளிநாடுகளில் இருந்து கிடைக்கும் உதவிகளை பெறுவதில் சிக்கல் ஏற்பட்டுள்ளது.

தமிழர்களை கொன்றுகுவிப்பதால் வெளிநாடுகள் தங்கள் உதவிகளை அனுப்ப தயக்கம் காட்டுகின்றன.

இலங்கைப் பொருளாதாரமும் சீர்குலைந்து விட்டது. இந்தக்கூட்டத்தில் இலங்கைக்கு கொடுக்கப்படும் உதவிகள்குறித்து பாரிசில் மாநாடு விரைவில் நடைபெறவிருக்கிறது.

அந்த மாநாட்டில் என்ன நடக்கும்என்பதை எண்ணி இலங்கை அஞ்சுகிறது.

அதற்கு முன்னதாக திம்புவில் எப்படியாவது பேசி சமாளிக்கலாம் என்று இலங்கை அரசு திட்டமிடுகிறது.

இவ்வாறு பாலகுமார் கூறினார்.

மாநாட்டில் கலந்து கொள்ளும் பிரமுகர்கள் புதுடெல்லியில் இருந்து விசேஷ விமானம் மூலம் திம்புவுக்குச் செல்கிறார்கள். தற்கான ஏற்பாட்டை இந்திய அரசு செய்துள்ளது-

நாளை துவங்கும் திம்பு மாநாடு எவ்வளவு நேரம் நடக்கும் என்ற விவரம் தெரியவில்லை

மாநாடு முடிந்ததும் அவர்கள்புதுடெல்லிக்குத் திரும்பி வருவார்கள்என்று எதிர்பார்க்கப் படுகிறது.

## பண்டாரநாயகா வரவேற்பு

திம்பு மாநாட்டை இலங்கை முன்னாள் பிரதமர் ஸ்ரீமாவோ பண்டாரநாயகாவரவேற்றுள்ளார்

எத்தகையகட்டத்திலும் இலங்கை — இந்தியா இடையே உள்ள உறவு கட்டிக்காக்கப்பட வேண்டும் என்றும் அவர் கூறினார்.

இலங்கை தமிழர் விடுதலை இயக்க முன்னணித் தலைவர்கள் அமிர்தலிங்கம். எம். சிவசிதம்பரம், ஆர். சம்பந்தன் ஆகியோரும் நேற்று மத்திய வெளி விவகார செயலாளர் ரமேஷ் பண்டாரியை சந்தித்துஆலோசனை நடத்தினார்கள்.

## வேலூர்

நாள்:- 9-7-85 மாலை 6-மணி இடம்: அண்ணா கலையரங்கம் வேலூர் பொருள்: காயிதே மில்லத் 90வது பிறந்த நாள்விழா தலைமை: அமைச்சர் யூசுப் விழா துவக்கம்: அமைச்சர் ப.உ. ச.சிறப்புரை: அமைச்சர் ஆர், எம், வீ. அப்துல் சமது, ஊரன் அடிகள், ஏ, சி, சண்முகம், முகமது ஹபீர் அலி. ரூபஸ் ஜெயசரன் மற்றும் பலர்.

கலைநிகழ்ச்சி: டாக்டர் யூசுப் குழு.

# கேரளாவில் வெள்ளச்சேதம் ரூ.600கோடி

திருவனந்தபுரம், ஜூலை ,7—

கடந்த வாரம் கேரளா மாநிலத்தில் பெய்த பெருமழையினால் பயங்கர வெள்ளம் ஏற்பட்டது தெரிந்ததே.

பல வீடுகள் நீரில் மூழ்கின, சாலைகள், பாலங்கள், பயிர்கள் முதலியவை நாசமாயின,

இந்த வெள்ளத்தால் கேரள மாநிலத்தில் சுமார் ரூபாய் 600 கோடி மதிப்புள்ள சொத்துக்கள் சேதம்அடைந்தன என்று கணக்கிடப்பட்டுள்ளது.

வெள்ள நிவாரணம் கோரி அறிக்கையை சமர்ப்பிப்பதற்கு கேரள வருவாய்த்துறை அமைச்சர் ஜோசப் புது டெல்லிக்கு புறப்பட்டுச் சென்றார்.

உடனடியாக 40 கோடி ரூபாய் நிவாரணம் அளிக்க வேண்டும் என்று கேரள அரசு கோரிக்கை விடுத்துள்ளது. மத்திய அரசு ஏற்கனவே 10 கோடி ரூபாய் வழங்கியுள்ளது.



# கவர்னர்கள் அதிகாரம்: மறுவரையறை செய்ய கோருகிறார் ஜைல்சிங்

**புதுடெல்லி, ஜூலை 7- ஆளுநர்களின் சட்டப்பூர்வ செயல்பாடுகள் குறித்து மறுவரையறை செய்யப் படவேண்டும் என்று ஜனாதிபதி ஜைல்சிங் கேட்டுக் கொண்டார்**



டெல்லியில் ஆளுநர்களின் 2 நாள் மாநாடு நடந்தது இதில் ஜனாதிபதி ஜைல்சிங், பிரதமர் ராஜீவ் ஆகியோர் கலந்து கொண்டனர்.

ஜனாதிபதி பேசுகையில் கூறியதாவது:-

பல்கலைக்கழகவேந்தர்களாக ஆளுநர்களே இருப்பதால் அவர்கள் சேவை மேலும் பலதுறைகளில் சிறக்கமுடியும்.

தற்போது நாட்டை நோக்கியுள்ள பிரச்சினைகளைத் தீர்க்க ஆளுநர்கள் தங்கள் அறிவாற்றல் அனுபவம் ஆகியவற்றைப் பயன்படுத்த முடியும்.

ஆளுநர்களின் சட்டபூர்வ பணி பற்றி மறு வரையறை செய்ய வேண்டும். இது பற்றிஎல்லாமட்டத்திலும் ஆலோசனை நடத்தலாம்.

இவ்வாறு ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்.

## இலங்கை தமிழர் பிரச்சினை

இந்த மாநாட்டில் பிரதமர் பேசுகையில் இலங்கைத் தமிழர் பிரச்சினை பற்றியும் குறிப்பிட்டார்.

திம்புவில் இலங்கைத் தமிழர் பிரச்சினை பற்றி பேச்சு நடக்கஇருக்கிறது இருதரப்பையும் பேச்சுவார்த்தைக்கு அமரவைப்பது இந்தியாவின் கடமையாக இருந்தது என்று பிரதமர் ராஜீவ்கூறினார்,

# ஆதிவாசி இனத்தை சேர்ந்த சவுத்திரி குஜராத் முதல்வரானார்

**காந்திநகர், ஜூலை 7— குஜராத்தின் புதிய முதலவராக ஆதிவாசி இனத்தைச் சேர்ந்த அமர்சிங் சவுத்திரி தேர்ந்தெடுக்கப் பட்டார்.**

கடந்த 4 மாதங்களாக குஜராத்தில் இடஒதுக்கீடு கொள்கையை எதிர்த்து பயங்கர வன்முறை தாண்டவமாடியது. இதனால் 200 பேருக்கு மேல் கொல்லப் பட்டனர், சட்டம்ஒழுங்கு சீர்குலைந்ததை அடுத்து குஜராத் முதல்வராய் இருந்த சோலங்கி பதவி விலக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

நேற்று அவர் தமது ராஜினாமாவை ஆளுநரிடம் சமர்ப்பித்தார். அதைத் தொடர்ந்து புதியமுதல்வரைத் தேர்ந்தெடுக்க காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்கள் கூட்டம் நேற்று மாலை நடைபெற்றது.

காங்கிரஸ் மேலிடப் பார்வையாளராக மத்திய நிதிஅமைச்சர் வி.பி.சிங் வந்திருந்தார். குஜராத் மாநிலப்பொறுப்பைவகிக்கும் அகிலஇந்தியகாங்கிரஸ் பொதுச்செயலாளர்மூப்பனாரும் இக் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

## உள்துறை அமைச்சர்

மாலையில்நடைபெற்ற இக்கூட்டத்தில் அமர் சிங் சவுத்திரி புதிய முதல்வராக தேர்நதேடுக்கப் பட்டார்.

புதிய முதல்வர் அமர்சிங் ஆதிவாசி இனத்தைச் சேர்ந்தவர். சோலங்கி அமைச்சரவையில் உள்துறை அமைச்சராக இருநதவர்.

# வங்க தேச அழகிகள் கராச்சியில் விற்பனை

கராச்சி, ஜூலை 7— வங்காள தேசத்தைச் சேர்ந்த இளம்வயதுடைய அழகிய பெண்கள் கராச்சியில் விற்பனை செய்யப்படுகிறார்கள்

வங்காளதேச அழகிகளை கராச்சியில் உள்ள பணக்காரர்கள் போட்டி போட்டுக் கொண்டு வாங்குகிறார்கள்.

இதனால் ஒரு பெண்ணின் விலை 10 ஆயிரம் ரூபாய் வரை உயர்ந்துள்ளது.

வங்காள தேசத்தில் இருந்து ஏராளமான இளம்பெண்களை சில கொடியவர்கள் பாகிஸ்தானுக்கு கடத்திச்சென்று விற்பனை செய்துவருகின்றனர்.

சமீபத்தில் கடத்திவரப்பட்ட பெண்கள் கராச்சியில் விற்பனை செய்யப்பட்டனர். அவர்களில் ஒல்லியாகவும் அழகாகவும் இருக்கும் பெண்களுக்கு ஏகப்பட்ட கிராக்கி இருக்கிறது,

ஒரு பெண்ணைதிருமணம் செய்து வாழ்வதைவிட இப்படிப்பட்ட பெண்களை விலைக்கு வாங்கி வீட்டு, வேலைகளுக்குப் பயன் படுத்துவதற்கு குறைந்த அளவு செலவே ஆகிறது என்று கராச்சிவாசிகள் கருதுகின்றனர். இதைக்கடத்தல்காரர்கள் பயன்படுத்திக் கொண்டு வருகின்றனர்.

## ஏல விற்பனை

1. Kundenmel Siremel, 25, Pullianthope High Road, MS-12 (1-2-83 முதல் 31-12 83 வரை) ஏலத்தேதி 24-5 85லிருந்து 17-7-85 பிற்பகல் 3 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.
2. B. Champavathi, 40, Decostor Road, Pullianthope, MS 12 (1-11-83 முதல் 30-6 84 வரை) ஏலத்தேதி 10-6-85லிருநதது 17-7 85 பகல் 1 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது.
3. P Prak sh, 30, Edwardpark Kosapet, MS-12. (1-8-83 முதல் 30-5-84 வரை) ஏலத்தேதி 23-7 85 அன்று பகல் 10 மணிக்கு
4. Kanth Kav r, 22, Mettu Street, Madras 23 (1 11-82 முதல் 31-1-84 வரை) ஏலத்தேதி 25-7-85 அன்று பகல் 12 மணிக்கு
5. P, AshokKumar Go'a cher, 47 Hajist, Ayanavaram, MS 23 (26 8-82 முதல் 31 12 83 வரை) ஏலத்தேதி 29-7-85 பகல் 12 மணிக்கு
6. FulchandJain, S. S Devar 6th St, Ayanavaram, MS- 3 (24-8-82 முதல் 1-3-84 வரை) ஏலத்தேதி 31-7 85 பகல் 11 மணிக்கு
7. M. SampathRaj Jain 37, Rangan than chetti Road, Nungambakkam, MS 34 (26-8 82 முதல் 31-5-84 வரை) ஏலத்தேதி 21-6-85லிருநதது 5-8 85 பகல் 10 மணிக்கு மாற்றப் பட்டுள்ளது.
8. Bhanwarlal Manakchand, 6 7, Poonamallee High Road, Aminjikarai MS 29 (23-4-83 முதல் 30-11-83 வரை) ஏலத்தேதி 10-7-85லிருந்தது 13 8-85 பகல் 10 மணிக்கு மாற்றப் பட்டுள்ளது.

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன் பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம்பெற்றஏலதாரர், எம். தரம்சந்த்ஜெயின் 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியரின உத்திரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road MADRAS—29



# கலை விருந்து



★ வெகுளிததனததை வெளிபபடுததும் ஜோடிகள் ரவீந்
ரேவதி படம் : திர

## சூட்டிங்... சூட்டிங்...

### பெண் நீதிபதி வேடத்தில் கே. ஆர். விஜயா

அபிராமபுரம் 4-வது தெருவிலுள்ளசெட்டியார் பங்களாவைச் சுற்றி மக்கள் வெள்ளம் நிற்கிறது. என்ன என்று வேடிக்கை பார்க்க நாமும் அங்கே செல்கிறோம். வேட்டியை மடித்துக்கட்டிக் கொண்டு இயக்குனர் ஜெகதீசன் கேமிரா கோணததை பார்த்துக் கொண்டிருக்கிறார். கேமிரா முன்பு ஜெய்சங்கரும் கே ஆர். விஜயாவும் நிற்கின்றனர்.

கையில் சூட்கேசுடன் உள்ளே நுழையும் ஜெய்சங்கரை அவர் மனைவி திரிபுர சுந்தரி (கே ஆர் விஜயா) அன்புடன் வரவேற்கும் காட்சி பட்மாக்கப்பட்டது. இந்தக்காட்சி ஒ்கே ஆனதும் சுறுசுறுப்பாக அடுத்த காட்சிக்கு தயாராகிறார்கள்.

ஜெய்சங்கர் கே.ஆர். விஜயாவிடம் என்ன திரிபுரசுந்தரி நீ இன்னும் தூங்கலியா என்கிறார். இல்லை என்ற வகையில் கணவனின் முகத்தை பார்க்கும் திரிபுரசுந்தரியிடம் ஆமா நீ சாப்பிட்டிய என்கிறார் இல்லை என்று மனைவி கூற புருஷன் சாப்பிட்டபின்பு தான் பெண்டாட்டி சாப்பிடனும் என்பது என்ன சம்பிரதாயமோ என்கிறார்,

உடனே திரிபுரசுந்தரி அதிலிருக்கும் சுகம் புருசனுக்கு தெரியாது. பெண்டாட்டிக்குத்தான் தெரியும் என்கிறார்.

இந்தக் காட்சிகளை பட்மாக்கி முடித்ததும் நம்மைப் பார்த்த ஜெகதீசன் வாருங்கள் வாருங்கள் என்று அழைத்துச் சென்று அன்று எடுக்கப்பட்ட மற்ற காட்சிகள் பற்றி விவரிக்கிறார்.

அவை இதோ—

என துபடத்தில் கே.ஆர் விஜய நீதிபதியாக நடிக்கிறார். எந்த வழக்கிலும் நீதி வழங்கும் முன் தன் விட்டிலுள்ள சமயபுரம் மாரியம்மன் பட்த்துக்கு முன் திருவுளசீட்டு எழுதி போட்டு அதில் என்ன என்ன முடிவு வருகிறதோ அதன்படியே தீர்ப்பளிப்பார்.

கொலைக்குற்றம் சாட்டப்பட்ட ஒருவனுக்கு மறுநாள் நீதிவழங்க வேண்டும் அவன் தான் கொலை செய்தான் என்பதற்கு சாட்சியங்கள் பலமாக இருந்தன, ஆனால் கே.ஆர். விஜயா வழக்கம்போல் மாரியம்மனுக்கு முன் திருவுளச்சீட்டு போட்டு பார்த்து அதன்படி அந்தக்குற்றவாளியை நிரபராதி எனத் தீர்ப்பளிக்கிறார்.

கே. ஆர். விஜயாவின் இந்தப் போக்கு கண்டு அதிகாரிகள் திகைத்துஅப்பீலுக்கு போகவும் முடிவு செய்கின்றனர். இதற்கிடையில் தொலைக் காட்சியில் புலவர் கீரனின் உபன்யாச நிகழ்ச்சி காட்டப்படுகிறது. அந்த நிகழ்ச்சியில் அமர்ந்து கொலைக்குற்றம் சாட்டப்பட்ட குற்றவாளி என்று, எத்தனைமணிக்கு கொலை செய்ததாக குற்றம் சாட்டப்பட்டானோ அன்று அதே நேரத்தில் உபன்யாசம் கேட்டுக் கொண்டிருக்கிறான்.

இதைக்கண்ட அதிகாரிகளும் திகைத்து கே.ஆ. விஜயாவின் திறமையை பாராட்டுகின்றனர். இதற்குநான் காரணமல்ல யார்யார் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று பார்த்துக்கொண்டிருக்காளே அந்த மாரியம்மனே தான் காரணம் என்கிறார்.

மேற்கண்ட காட்சிகள் பட்மாக்கப்பட்டன.



★ ஆடவரெல்லாம் ஆடவரலாம் என அழைப்பது டிஸ்கோ சாந்தி.

## ராதிகா மீது மோகன் கொண்ட மோகம்

சுப்ரமணி கிராமத்தில் வாழ்பவன். சினிமாவில் அதிக ஆர்வம் உள்ளவன். பிரபல [illegible] ரஞ்சனியின் பரமர [illegible].

பண்ணையார் [illegible] ரஞ்சனி [illegible] பற்றி [illegible] அ [illegible] கேட்ட [illegible] ரம் அடை [illegible] யாரை கொலை செய்துவிட்டு சென்னைக்கு வருகிறான்,

சென்னையில் வேலை தேடி அலைந்து கடைசியாக தன் அபிமான நடிகை ரஞ்சனியின் சார்டிரைவராக வேலைக்குப் போகிறான், பழம் நழுவி பாலில் விழுந்து—அதுவும் வாயில் விழுந்தது போல் ஆகிவிடுகிறது.

நடிகைரஞ்சனிதன்னை மேலும் அழகு செய்து கொள்ள அழகு நிலையத்துக்கு செல்லசுப்ரமணியை காரை ஓட்டச் சொல்லுகிறார், அங்குஅழகுசெய்து கொள்ளும்பொழுது சுப்ரமணிபார்த்து ரசிக்கிறான் போதும் போதாததற்கு அன்றுநடிகையின் பாடல் காட்சியை வேறு பார்த்து விடுகிறான்.

இந்த இன்ப நினைவுகளோடு நடிகையின் அந்த ரங்க அறைக்கு செல்கிறான். அங்கே ரஞ்ரனி படுக்கையில் படுத்திருப்பதை மோகன் கண்டு களிப்பதை ரஞ்சனி பார்த்துவிடவே, உடனே போலீஸ்க்கு போன் செய்ய முயற்சிக்கிறார். சுப்ரமணி இதை தடுக்க போன் ரஞ்ஜனி ஓட, இவன் நடிகையை ஓடிப்பிடித்து தன்நிலை மறந்து நடிகையை அமுக்கிப்பிடிக்கிறார். அந்த அதிர்ச்சியில் ரஞ்சனி மூர்ச்சையாகி விடுகிறாள். அப்பொழுது பிரஸ் போட்டோகிராபர் உள்ளேநுழைந்து பட்மும் எடுக்கிறார். இதைக் கண்ட சுப்பிரமணி போட்டோகிராபரை துரத்திப்பிடிக்க அவர் கமராவை போட்டு விட்டு ஓடுகிறார். உள்ளே வந்து ரஞ்சனியை பார்க்கும் போது அவர் மயக்கமாகிவிட்டதைப் பார்த்து பதறி—கதறி அழுது புலம்பி "உங்களிடம் எந்தவிதமான தப்பான காரியத்திலும் அணுகவில்லை உங்களைதப்பாக சொன்ன வரையே கொலை செய்தவன் நான்" என்று கூறி மூக்கில் விரலை வைத்துப் பார்க்க நடிகையின் உயிர் போனதை அறிந்து அழுகிறான். இந்தகாட்சி 'ஸ்டில்ஸ்' ரவி தயாரிக்கும் சாயாபுத்ரா பிலிம்ஸ் "நான் உங்கள் ரசிகன்" படத்துக்காக பட்மாக்கப்பட்டது.

ரஞ்சனியாக ராதிகாவும், ரசிகன் சுப்ரமணியாக மோகனும், பிரஸ் போட்டோகிராபராக ஷியாம் சுந்தரும், மற்றும் நளினி, சரத்பாபு, ஸ்ரீகாந்த், சத்யராஜ், ஆகியோரும்நடிக்கின்றனர் ராஜ்பிரீத் ஒளிப்பதிவு செய்ய, கங்கை அமரன் இசையமைக்க, எம்,எஸ். மது வசனம் எழுத, கதை திரைக்கதை எழுதி டைரக்ட் செய்கிறார் மனோபாலா.

## ★ விமர்சனம் ★ மயூரி ★ பாலுமணி ★

உள்ளத்தில் உறுதிஇருந்தால் எந்த ஊனத்தையும் வெல்லலாம் என்பதற்கு நடமாடும் உதாரணமாக விளங்கும் சுதா சந்திரனின் வாழ்க்கை வரலாற்றை 'மயூரி' என்ற பெயரில் படமாக்கியுள்ளனர். இந்த படத்தில்சுதா சந்திரனே நடித்துள்ளார்

சுதா சந்திரனின் வாழ்க்கை வரலாற்றுடன் சினிமாவுக்காக சிலகாட்சிகளைச் சேர்த்துபடத்தின் கதையை அமைத்துள்ளனர், சிங்கிதம் சீனிவாச ராவ் இப்படத்தைஇயக்கியுள்ளார், படத்தின் ஒவ்வொரு பிரேமிலும் அவரது திறமை பளிச்சிடுகிறது.

ஒரு நடிகையை சுதாவின் பாத்திரத்தை ஏற்க வைத்திருந்தால் கூட இவ்வளவு சிறப்பாக செய்திருக்க முடியாது சுதாசந்திரனின் நடிப்பு அவ்வளவு அபாரமாக உள்ளது.

இருகால்களையும்இயற்கையாக உடையவாகள் கூட ஆடமுடியாத அளவிற்கு புள்ளிமானெனத் துள்ளித்துள்ளி சுதாசந்திரன் ஆடும போது தியேட்டரே கரவொலியிரல் அதிருகிறது.

சுதாசந்திரனின் திறமையின நடிப்பு, சங்கிதம் சினிவாசராவின் திறமையான டைரக்ஷன் எஸ்,பி. பாலசுப்ரமணியத்தின் இனிய இசையில் உருவாகிஇருக்கும்இப்படத்துக்குசுதாசந்திரன் மீது தாய்மார்கள்கொண்டபரிவும் இணைந்திருப்பதால் பெரியவரவேற்பை பெற்றுக்கொண்டிருக்கிறது. இதுஒருவெள்ளி விழாபடமாக அமைந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.



★ விஜயகாந்த் நளினி.
படம் : காலம் மாறுது.

## நானேராஜா நானேமந்திரி

முரட்டுத்தனததையும், முட்டாள் தனக்தையும், கொண்ட பண்ணையார் ரங்கமணி இவரைத் திருத்த வேலைககு வந்து மனதைப்பறி கொடுத்த பாக்யியம். இவர்களுக்கிடையில் முறைப்பெண்ணாகவரும்ஜீவிதா. இவர்களை வைத்துப்பின்னப்பட்டது இப்படத்தின் கதை.

### -:விமர்சனம்:-

படத்தின்நாயகன் ரங்கமணியாக விஜய்காந்த் நடித்துள்ளார். டூயட்பாடவும், சண்டை போடவுமே தெரியும்என்றிருந்த விஜய்காந்துக்குஒருமாறுதலான பாத்திரம். காமெடிகலந்த கதாநாயகன் பாத்திரத்தை விஜய்காந்த் சிறப்பாகச் செய்துள்ளார் விஜயகாந்தின் சிறப்புக்கு இப்படத்தில் செந்திலுப சிவராமனும் துணைநிற்கின்றனர்.

பாக்கியமாக வரும்ராதிகாவும் தன்பத்திரத்தை திறம்படச் செய்துள்ளார் கோபிக்கும் போதும் ஜீவிதாவின்நடிப்பில் ஒரு அழகு தென்படுகிறது.

கவுண்டமணியின் நகைச்சுவை நடிப்பு வழக்கம் போல் வயிறு குலுங்கச்செய்கிறது.

இளையராஜா இசையமைத்துள்ளார். இசை நன்றாக இருந்த போதிலும் ஒன்றிரண்டு பாடல்கள் தான் கேட்கும்படி உள்ளது. ராஜராஜனின் ஒளிப்பதிவும் கண்ணுக்கு குளுமையாகவும் [illegible] தரமாகவும் உள்ளது.

ஆர். சுந்தாராஜன் திரைக்கதை வசனம் எழுதி உள்ளார், வசனம் பெரிதும் குறிப்பிடும் படியாக இல்லை திரைக்கதை நன்றாக உள்ளது.

பாலு ஆனந்த்பட்த்தை இயக்கியுள்ளார். காட்சிக்கு காட்சி விறுவிறுப்பு அதிகரிக்கும் வகையில் பட்த்தை தொய்வின்றி திறம்பட இயக்கியுள்ளார் இடைவேளை இப்படித்தான்இருக்கும்என்று ஊகிக்க முடியாத அளவுக்கு பட்த்தை திறம்பட இயக்கி இருப்பதோடு படம் முழுவதும் பாலு ஆனந்தின் திறமை பளிச்சிடுகிறது. இது பாலு ஆனந்துக்கு நல்ல ஒரு மாற்றத்தை தரும். கதையின் முடிவுகூட ஒரு புதுமையாகத்தான் இருக்கிறது.

மொத்தத்தில் அனைத்து மக்களும் ரசித்துப் பார்க்கும் பொழுதுபோக்குப் பட்ம்.



[illegible] மொழி பேசும் ஜோடிகள் கமல ராதா
படம் : ஜப்பானில் கல்யாணராமன்

## காதல் மோகத்தில் கார்த்திக்-ஜீவிதா

கார்த்திக் ஒரு போலீஸ் இன்பெக்டர். ஜீவிதா அதே துறையில்பணியாற்றுபவர். இருவரும் ஒருவரையொருவர் உள்ளத்தின் அடித்தளத்தில் வைத்து நேசித்தனர் ஒருநாள் இருவரும்மோட்டார்சைக்கிளில் அமர்ந்து ஊரையே சுற்றித் திரிகின்றனர்.

காதல்போதையில் ஒரு வழிப் பாதை (ஒன்வே) கூட அவர்கள் கண்களில் படவில்லை. சட்டத்தை காக்கவேண்டியஅவர்களே சட்டத்தினை மீறினால். விளைவு - இருவரையும் லாக்-அப்பில் அடைத்து விடுகின்றனர். நள்ளிரவு நேரம். வெளியேபோலீஸ் காவல்.

காதலர்கள் அவர்கள் வெறுமனே எப்படி இருக்க முடியும்? 'முத்தம் கட்டி முத்தம் கம்பிக்குள்ளே எண்ணிக்கொள்ளு என்று தங்களை மறந்து காதல் கீதம் பாடி மகிழ்கின்றனர். அந்தக்காதல் இசையில் சொக்கிப் போகிறார்கள் காவல் காக்கும் போலீஸ்காரர்கள்.

இப்படியொரு காட்சி ஸ்ரீசண்முகாலயா ஆர்ஸின் 'தர்மபத்தினி பட்த்திற்காக பட்மாக்கப் பட்டது. கார்த்திக், ஜிவிதா, சந்திரசேகர், கோமதி, கவுண்டமணி, செந்தில், சிவராமன், வினோத், ஸ்ரீலேகா நடிக்கும்இப்பட்த்தின்கதையை புஷ்பானந்த் எழுத. வசனம் எழுதுகிகிறார் கண்மணிசுப்பு, இசைஇளையராஜா தமிழ்மணி தயாரிக்கும் இப்பட்த்தின் திரைக்கதைஎழுதிஇயக்குகிறார் அமீர்ஜான். பட்ம் முடிவடையும் நிலையில் உள்ளது.



★ வெற்றியின் சின்னம இரட்டை இலை என ஆனந்தபாபு ஜீவிதா [illegible] டம கூறுகிறாரோ? படம் : வெற்றி கனி

### பணம் பத்தும் செய்யும்

தேவரின் தண்டாயுதபாணி பிலிம்ஸ் தயாரித்து வரும் 'லஞ்சாபகேசன்'. வண்ணப்பட்த்தின் பெயரை இப்போது "பணம் பத்தும் செய்யும்" என மாற்றி உள்ளனர். இப்பட்த்தின் பட்பிடிப்பு முடிவடைந்து விட்டது. இப்பட்த்தில் கவுண்டமணி. ஸ்ரீவித்யா, எஸ். வி. சேகர், ஊர்வசி செந்தில், காவைசரளா, தேங்காய் சீனிவாசன் அனுராதா, உறாஜாஷெரீப், ஒருவிரல்கிருஷ்னாராவ், லோக்கர்துளசி, செஞ்சிகிருஷ்ணன் ஆகியோர் நடிக்கின்றனர். ஆர். தியாகராஜன்திரைக்கதை அமைக்க வசனத்தை வியட்நாம்வீடு சுந்தரம் எழுதுகிறார். வாலியின் பாட்ல்களுக்கு சங்கர்—கணேஷ் இசையமைக்கின்றனர். கோவிந்தன் ஒளிப்பதிவு செய்ய எடிட்டிங்கை எம். ஜி. பாலுராவ்கவனிக்கிறார். எம். ஏ. மாரியப்பன் மேற்பார்வையில் சி. தண்டாயுதபாணி தயாரிக்கும் இப்பட்த்தை தேவர் பிலிம்சில் பலபடங்களுக்கு அசோசியேட் டைரக்ட்ராக பணிபுரிந்த விஜயசிங்கம் டைரக்ட் செய்கிறார். இப்பட்ம் அடுத்த மாதம் திரைக்கு வருகிறது.